மரியாதைகளனைத்தும் அவன் பிரேதத்துக்குச் செலுத்தப்பட்டன. இம்மரியாதைகளுக்கிடையே பிரான்சு கப்பல்கள் துறை முகத்தைவிட்டுப் புறப்பட்டன.

பிரான்சை யணுகியதும் பிரேதப் பெட்டி வேறொரு கப்பற்கு மாற்றப்பட்டது. அக்கப்பல் 1840-ம் ஆண்டு டிசம்பர் 9-ம் தேதி சீன் நதிவழியே சென்று கொண்டிருந்தது. ஜனங்கள் நதிக்கரையோரம் நின்று கண்ணீர்வடித்துக் கதறினர். பிரான்சு மாந்தர்கள் துக்கம் கொண்டாடினர். துப்பாக்கி வெடிகள் எங்கணும் குமுறின. டிசம்பர் மாதம் 14-ம் தேதி கப்பல்கள் கூர்பிவாய் என்னும் கிராமத்தை யடைந்தன. அங்கே பிரேதப் பெட்டி கப்பலிலிருந்து கரைக்கு மாற்றப்பட்டது. நெபோலியனை எதிர்கொண்டு அழைப்பதேபோல் ஜோஸப்பைனது உருவச் சிலையொன்று அங்கு அமைக்கப்பட்டிருந்தது. பிரான்சு அரசனான லூயி பிலிப் தன் பரிவாரங்களுடன் எதிர்கொண்டழைத்தான். அப்பொழுது இளவரசன் தன் தந்தையிடம் நெபோலியனது பிரேதப்பெட்டியை ஒப்புவித்தான். அரசனும் அதைப் பிரான்சு மக்களின் சார்பாகப் பெற்றுக்கொண்டான். நெபோலியன் விரும்பிய வண்ணமே, அவனது பிரேதம் பிரான்சுமாந்தர்க்கிடையே 1840-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 15-ம் தேதியன்று புதைக்கப் பட்டது. அதைச் சுற்றிலும் பெரியதொரு கட்டிடமும் எழுப் பப்பட்டது.

இந்நன்னாளை வருடந்தோறும் பிரான்சு தேசத்தில் ஜனங்கள் கொண்டாடுகிறார்கள். பிரான்சுக்குச் செல்பவர்கள் நெபோலியனது கல்லறைக்குச் சென்று அம்மகானுக்கு இன்றும் மரியாதை செலுத்துகின்றனர்.

முற்றிற்று.

சஞ்சீவி பிரஸ், தர்மபுரி.